[22nd September 1958

(ஆ) அது சம்பந்தமாக அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) The Board of Revenue has been asked to take necessary action in the matter as the Board is competent to do so.

SRI A. VEDARATHNAM : 1955 நவம்பர் மாதம் அடித்த புயலில் இருபது அடிக்கு மேலாக கடல் தண்ணீர் கிராமத்திற்குள் புகுந்து குடி தண்ணீர் எல்லாம் உப்பாகி விட்டது. ஆகவே அங்குள்ளவர்களுக்கு உடனடியாக குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது அதற்காக ஒரு திட்டம் 30 ஆயிரம் ரூபாய் செலவில் அங்கு அமுல் செய்யவேண்டுமென்று கலெக்டர் அவர்கள் சிபாரிசு செய்திருக்கிறார். போர்டார் அதற்கு வேண்டிய முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்.

*Peruvalai and Ayyan channels*

* 400 *Q*.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) whether any representations were received in 1957–58 from the ayacutdars of Peruvalai and Ayyan channels in Tiruchirappalli district that they were not getting enough supply of water for irrigation;

(*b*) whether the non-requirements of water in the Tanjore area prevented the Government from letting into the Cauvery at Mettur heads the quantity of water that will be required to give a good supply to the Ayyan and Peruvalai channels, and

(*c*) the action by the Government to ensure continuous and good supply of water in these channels?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes.

(*b*) The non-requirement of water for Tanjore area generally arises during heavy rainfall days in the monsoon months and in these days the issue for this area is curtailed at Mettur to economise water. However, a minimum of four to five thousand cusecs is allowed at Mettur even then and this will facilitate half to three-fourth supplies for the Ayyan, Peruvalai and other channels. The curtailment would be only for a couple of days and would not materially affect the condition of crops.

(*c*) Continuous supplies are always allowed. But for allowing good supplies, some measures have been taken by extending the existing groyne. The further measures to be taken would depend upon the results of the groyne, which are being watched for a few seasons.

SRI S. LAZAR : மான்ஸூன் காலத்தில் தஞ்சாவூர் பக்கம் அதிகமாக மழை பெய்யக்கூடும். ஆனால் அவ்விதம் திருச்சியில் பெய்வதில்லை. அந்த சந்தர்ப்பத்தில் அய்யன் பெருவாலை சானலில் 4,000 கன அடி தண்ணீர் விடுவது மிகக் கஷ்டமாக இருக்கிறது. இந்த நிலையில்

22nd September 1958]

அங்கு 20, 25 நாட்களாக தண்ணீர் இல்லாமல் இருந்தது என்ற புகார் அரசாங்கத்திற்கு வந்ததா? அதன் மேல் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டது ?

THE HON. SRI P. KAKKAN: அதிகமான தண்ணீர் வீணுக சமுத்திரத்தில் விழுவதால் மேட்டூரில் உள்ள தண்ணீரை அய்யன் பெரு வாலே சானல் மூலமாக தண்ணீர் சப்ளை செய்யப்பட்டு வருகிறது. கழிந்த அதாவது 1957 நவம்பர் மாதத்தில் ஒரு வாரம் இந்த மாதிரியான நிலை ஏற்பட்டது என்று தெரியவருகிறது. இவ்விதம் ஏற்படாமல் இருக்க க்ராயன் கட்டி சப்ளை செய்வதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

*Gramdhan villages*

* 401 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) எந்தெந்த ஜில்லாக்களிலே எத்தனை கிராமதான கிராமங்கள் இருக்கின்றன ?

(ஆ) எத்தனை கிராமதான கிராமங்களிலே சர்வோதயக் கூட்டுறவு சொஸைடிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன ?

(இ) கிராமதான கிராமங்களிலிருக்கும் விவசாயிகளுக்கு என்னென்ன வசதிகள் செய்து கொடுக்க அரசாங்கம் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*), (*b*) & (*c*) The particulars are given in the statement[a] placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஸார், இதற்கு கொடுக்கப்பட்டிருக்கின்ற ஜாபிதாவில் 9 சர்வோதய கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கு 4,73,963 ரூபாய் கடனாக வழங்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் கொடுக்கப்பட்டிருக்கும் கடன் கள் நீண்டகால தவணைகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதா அல்லது குறுகிய கால தவணைகளுக்கு கொடுக்கப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில குறுகிய கால தவணைகளாக கொடுக்கப்படும், சில நீண்டகால தவணைகளாக கொடுக்கப்படும், சில மத்திய கால தவணைகளாக கொடுக்கப்படும். இது அந்தந்த கடன்களை பொறுத் திருக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இந்த கிராமதான சர்வோ தய கூட்டுறவு முறையில் நடைபெறும் வேலைகள் எல்லாம் திருப்திகரமான முறையில் நடந்து வருகின்றதா ? அரசாங்கம் செலவு செய்யக்கூடிய பணங் கள் எல்லாம் திருப்திகரமான முறையில் செலவு செய்யப்படுகின்றனவா, அல்லது திருப்தி இல்லாத முறையில் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றனவா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போதுதான் இந்த சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்றிரண்டு வருடங்கள் கழிந்த பின் தான் அதைப்பற்றி அபிப்பிராயம் சொல்ல முடியும்.

SRI V. SUBBIAH : ஸார், கிராமதான சர்வோதய முறையில் வாலாந்தூர் என்ற இடத்தில் நடைபெற்றுக்கொண்டிருந்த கூட்டுறவுப் பண்ணை சீர்கெட்டுப்போனதற்குக்காரணம் அதிகாரிகளுடைய தலையீடா, அல்லது அரசாங்கத்தினுடைய அசிரத்தையா என்பதை அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதைப்பற்றி தனியாக கேள்வி போடவேண்டும்.

---

[a] Printed as Appendix II on page 487 infra.